20th September 1958]

Sri M. KALYANASUNDARAM : ராமநாதபுரம் ஜில்லாவில் வருடம் பூராவுமே நிரந்தரமாக 6 மைல் வேகத்தில் காற்று வீசிக்கொண்டிருப்பதால், அந்த ஜில்லா இந்த ஆராய்ச்சிக்கு ஏற்ற இடம் என்றும், மின்சாரம் இல்லாமலே காற்றின் உதவியைக் கொண்டு பம்பு செட்டுகளை இயக்குவதற்குரிய வாய்ப்பு அங்கே இருக்கிறது என்றும் சர்க்காருக்கு அறிக்கைகள் வந்திருக்கின்றனவா ? அப்படியானால், அவைகள் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : சர்க்காருக்குக் கிடைத்திருக்கும் 'மெடியொராலாஜிகல்' தகவலிலிருந்து, ராமநாதபுரம் ஜில்லா இந்த ஆராய்ச்சிக்கு ஏற்ற இடம் என்று தான் தெரிகிறது. ஆகவே, ராமநாதபுரம் ஜில்லாவில் இந்த ஆராய்ச்சியை நடத்தலாம் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் ராமநாதபுரம் ஜில்லாவில் எந்த இடம் இதற்கு மிகவும் தகுதியான இடம் என்பதைக் கண்டுபிடித்துச் சொல்வதற்கு ஒரு கமிட்டியை நியமித்திருக்கிறோம். அந்தக் கமிட்டியில், (1) Director, Regional Metoerological Centre, Madras, (2) Agricultural Meteorologist, Coimbatore : and (3) Agricultural Engineer ஆகிய மூன்று பேரும் அங்கம் வகிக்கிறார்கள். அவர்கள் இந்த ஜில்லாவைச் சுற்றிப் பார்த்துத் தகுதியான இடத்தைத் தெரிந்தெடுப்பார்கள்.

Sri K. SATTANATHA KARAYALAR : தற்சமயம் இதர ஜில்லாக்களில் 'விண்ட் மில்'-கள் இல்லையா ? குறிப்பாக கன்னியாகுமரி மாவட்டத்தில் விண்ட் மில் இல்லையா ? அங்கே விண்ட் மில் இருந்தால் அது எப்படி உபயோகிக்கப்படுகிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : விண்ட் மில்களினால் நாம் அடையக்கூடிய பலன்களை அனுபவபூர்வமாகக் கண்டறிவதற்காக அவைகளில் ஆராய்ச்சி நடத்தப்படத்தக்க விண்ட் மில்கள் இல்லை.

Sri N. K. PALANISAMI : விண்ட் மில்களில் ஆராய்ச்சி நடத்துவதற்கு அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஆராய்ச்சி நடத்துவதற்குத் தகுந்த இடத்தைக் கண்டுபிடித்துச் சொல்வதற்கான கமிட்டி ஒன்றை நியமித்திருக்கிறோம். அக்கமிட்டி அதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறது.

Sri K. VINAYAKAM : Sir, is it not a fact that an institution of wind mill for improving the agriculture of our country is an out-moded and archaic method which will not be of any utilitarian value to our country? Why should Government waste money when we are highly developed in electricity?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the Government are not so advanced as the hon. Member thinks.

*National Development Council*

* 351 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the State Government was represented at the meeting of the National Development Council held in May 1958 ;

(*b*) whether the question of starting Aluminium and Fertilizer Factories in this State was discussed;

(*c*) whether any decisions have been taken to raise the resources for the plan ; and

(*d*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) The Council did not discuss the specific question of starting aluminium and fertiliser factories in the Madras State; the representatives of the Madras Government, however, suggested in the course of discussion that in the Neyveli Lignite Project, the fertiliser plant and other related parts should all be included within the " core " of the Plan.

(*c*) & (*d*) The National Development Council visualised that resources would be raised to finance at least Part A of the Plan involving, an outlay of Rs. 4,500 crores and, so far as possible resources should also be raised to finance some portion at least of Part B of the Plan. The details of resources to be raised during the last two years of the Plan are under consideration of the Planning Commission and the Central and State Governments.

SRI N. K. PALANISAMI : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான செலவில் ஒரு பகுதி இந்த மாநிலத்திலிருந்து திரட்டப்பட வேண்டும் என்று கனம் மந்திரி கூறினார். அது எவ்வளவு பணம் என்று கனம் மந்திரி கூறுவாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I could not follow the question properly. But for the next two years we have to fulfil a plan of about 60 to 63 crores and we expect that we will be able to raise resources to the extent of 26·7 crores. We expect to get from the Government of India the balance of about 36 crores.

SRI M. S. SELVARAJAN : தேசிய அபிவிருத்திக் கவுன்சிலில்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கட்டிடங்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தில் 25 சத விகிதத்தைக் குறைத்து, திட்டத்தை நிறைவேற்றுவதற்கு ஆலோசனை செய்யப்பட்டதா ? அப்படிச் செய்வதானால், அது இந்த ராஜ்யத்தை எவ்வளவு தூரம் பாதிக்கும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த ராஜ்ய திட்டத்தைப் பொறுத்த வரையில், அதற்காக முதலில் ஒதுக்கப்பட்ட தொகை 152 கோடி ரூபாய். இந்தத் தொகை இப்போது கொஞ்சமும் குறைக்கப்படவில்லை. ஆகையால் இந்த ராஜ்யத்தைப் பொறுத்த திட்டங்கள் அந்த வெட்டினால் பாதிக்கப்படமாட்டா.

SRI A. GOVINDASAMY : நெய்வேலியில் ஆரம்பிக்கப்படவிருக்கும் உர உற்பத்தித் தொழிற்சாலையை தனியார் துறைக்கு விடும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ? அல்லது, அதைத் தாங்களே எடுத்து நடத்த சர்க்கார் உத்தேசிக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நெய்வேலியில் நிறைவேற்றப்படவேண்டிய திட்டங்கள் முழுவதும், இணைக்கப்பட்ட திட்டங்கள். எனவே, சர்க்காரே உரத் தொழிற்சாலையை அங்கே நடத்த வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

*Agricultural Engineering Work, Chingleput district*

* 352 *Q*.—SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the Agricultural Engineering work has been transferred in Chingleput district from the Assistant Agricultural Engineer to the District Agricultural Officer, Saidapet;